உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தேவாரப் பண்முறைக் கட்டளை விளக்கம்













ஆத. பழ.
சிதம்பரம்செட்டியாரவர்கள்
காரைக்குடி



தொகுத்தவர்
தேவாரம்
அ. நடேசதேசிகர்
காரைக்குடி

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

சமயாசாரிய சுவாமிகள்
மூவர் அருளிய

# தேவாரப் பண்முறைக் கட்டளை விளக்கம்



கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள்
அருளியவாறு



காரைக்குடி
தேவாரம் அ. நடேசதேசிகர் அவர்களால்
தொகுக்கப்பெற்று.

காரைக்குடி
உயர்திருவாளர்
ஆத. பழ. சிதம்பரம் செட்டியாரவர்கள்
பொருளுதவியால் அச்சியற்றி
வெளியிடப்பெற்றது.

கர ௵ ஆடி ௴ 16 ௳ 1962

உ

சிவமயம்



பிள்ளையார்பட்டிக் கோவில் மரபு

ஆ.தெ. பளெ. சிதம்பரம் செட்டியார்

காரைக்குடி

# முன்னுரை.

உமையொருபாகத்து இறைவனுகிய சிவபெருமான் திருவருளை எளிதில் பெறுதற்கு உரியவழி செந்தமிழ்த் தேவாரமாகிய திருமுறைகளை ஓதுதலேயாகும். திருமுறைகளைப் பண்ணோடு ஓதினுல் எல்லாச் செல்வங்களையும் எளிதில் பெறலாம் என்பது நூற்றுணிபு. அதை சமயாசாரிய சுவாமிகள் மூவர்களும் ஆங்காங்கே தமது திருப்பதிகங்களில் திருவாய்மலர்ந்தருளி இருக்கின்றார்கள்.

தற்போது பண்முறை ஓதுதல் சிறிதளவு வழுவி வருகின்றமையாலும், திருமுறைகண்ட புராணத்தில் கூறியவாறு இலாது கட்டளை பேதங்கள் அச்சுப் பிரதிகளில் மாறிக் கிடக்கின்றமையாலும், பண்முறைப்படி கட்டளை பேதங்களைத் தெளிவுபெற விளக்குகின்ற நூல் ஒன்று வேண்டும் என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர்.

அடியேன், சிதம்பரத்தில் வெ. சா. செட்டியாரவர்கள் தேவாரப் பாடசாலையில் திருமுறை வல்லுனராகிய கீழ்வேளூர் சொக்கலிங்க ஐயா அவர்கள் தேவார ஆசிரியராய் இருந்த காலையில் அவர்களிடம் தேவாரம் பயின்றேன். பின்னர் ஐயா அவர்கள் நாகை முதலான பாடசாலையில் இருந்து காரைக்குடி

பி. அ. முத்தையா செட்டியார் அவர்கள் தேவாரப் பாடசாலையில் ஆசிரியராய் வந்து அமர்ந்தார்கள். அடியேன் தருமபுர ஆதீனத்தில் தேவாரப்பணியில் ஏழு, எட்டு வருடம் இருந்தபொழுது பல உண்மைகளை அறியத்தக்க வாய்ப்புக் கிடைத்தது. பின்னர் ஐயா அவர்களைத் தரிசிக்கக் காரைக்குடி வந்தபோது அடியேனை இங்கேயே இருக்க ஆக்ஞாபித்தார்கள். அவர்களுடன் இருக்கும் நாளில் திருவருள் கூட்டினமையால் தேவாரப் பண்முறைக் கட்டளைப் பேதங்கள் ஒவ்வொன்றையும் விபரமாய் சொல்லித் தந்து அரிய பல நுட்பங்களையும் விளக்கினார்கள்.

காரைக்குடி சைவசித்தாந்தச் செல்வர் சொக்கலிங்க ஐயா அவர்கள் கூட்டுறவால் நான் பெற்ற பயன்கள் மிகப் பல. இவற்றை யெல்லாம் துணைக் கொண்டு ஒரு விளக்கம் எழுதவேண்டுமென நினைந்து இக்கட்டளை விளக்கத்தை ஒருவாறாக எழுதி முடித்தேன்.

இக்காலத்துக்கு இன்றியமையாத இந்நூலை அச்சிடவேண்டுமென்று கருதி, காரைக்குடி திருவாளர் ஆத. பழ. சிதம்பரம் செட்டியார் அவர்களிடம் என் கருத்தைத் தெரிவித்தேன். நல்லறம் புரிதலையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டுள்ள அவர்கள் எனது வேண்டுகோளைக் கேட்ட அளவில் மிக மகிழ்ந்து இப்புத்தகம் அச்சிடுதற்கு வேண்டும் பொருள் அனைத்தையும் தாமே தருதற்கு முன்வந்தார்கள்.

இவர்கள் காரைக்குடி நகரச் சிவாலய பரிபாலனத்தைப் பதினைந்து ஆண்டுகளாய்த் தாமே பார்த்தும், ஆடிப்பூரத் திருநாளை ஆரம்பித்து அன்று முதல் இன்றளவும் மிக விமரிசையாய் நகரத்தார் அவர்களைக்கொண்டு பல மண்டகப்படிகள் செய்வித்தும், வாகனம், மஞ்சம் முதலான அறப்பணிகள் செய்தும் ஆலயத்துக்கு உள்ளும் புறமும் மின் விளக்குகள் ஏராளமாய்ப் போடச்செய்தும், ஆண்டுதோறும் வைகாசிக் கிருத்திகையில் முருகப்பெருமானுக்கு விசேட அபிடேக ஆராதனைகள் செய்வித்து இந்திர விமான மென்னும் அழகிய கோரதத்தில் திருவுலாக்காட்சியை மிக விமரிசையாய் நடாத்தியும் வருகின்றவர்கள். தமது சொந்தக் காரியம் எத்துணைப் பெரியதாயிருப்பினும் அதைப் பொருட்படுத்தாது ஆலய கைங்கரியமே பெரிதென நினைந்து அல்லும் பகலும் உழைத்துவருகின்றவர்கள். இத்தகைய உயர்திரு செட்டியார் அவர்கள் இப்பணியை ஏற்றுக்கொண்டதில் வியப்பொன்றுமில்லை.

திருக்களரில் வடமொழி யெசுர் வேதபாட சாலை வைத்துப் பரிபாலித்துவருகின்ற இவர்கள், தென்றமிழ்த் தேவாரத் திருமுறைக்குப் பொருள் உதவி செய்தது மிகப் பொருத்தமுடையதேயாகும். காலத்தினாற் செய்த இவர்கள் நன்றிக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலுக்கு அணிந்துரை ஒன்று எழுதியருள வேண்டுமென்று குன்றக்குடி திருவண்ணாமலை

ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ அருணாசல தேசிகசுவாமிகளிடம் விண்ணப்பித்துக்கொண்டேன். அவர்கள் திருவுள்ளம் உவந்து இந்நூலைப் பார்வையிட்டு அணிந்துரை அருளியமைக்கு எனது வணக்கத்தையும் நன்றியறிதலையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் நல்ல முறையில் வெளிவரும்படி அச்சிட்டுத் தந்த எனது அன்பர் தேவகோட்டை செட்டிநாடு ஆசிரியர், பாலகவி இராமநாதன் செட்டியாரவர்கட்கும் எனது உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் வெளிவருவதற்கு உதவியாயிருந்த நண்பர்கள் பலர். அவர்கள் அனைவருக்கும், அவர்களுள் எனது ஊக்கம் தளராது ஒத்துழைத்துவந்த நண்பர் காரைக்குடி பழ. தெ. சேதுராமன் செட்டியார் அவர்களுக்கும் எனது மனம் உவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்விளக்கத்தின்படி தேவாரத் திருமுறைப் பண்கள் (24) என்பதும் அவற்றின் கட்டளை பேதங்கள் (120) என்பதும் உணரத்தக்கன. தேவாரம் ஓதுகின்றவர்களும் தேவாரப் பதிப்பு வெளியிடுகின்றவர்களும் பண்முறைக்கு அடிப்படைச் சட்டமாகிய திருமுறை கண்ட புராணத்தின்படி காட்டப்பெற்ற இவ்விளக்கத்தை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடியேன் பெரியோர்கள்பால் கேட்டு [illegible]தவற்றை ஒருவாறு தொகுத்து அச்சிட்டு வெ[illegible]ட்

டுள்ளேன். ஆதலின் இதில் ஏதேனும் குறைபாடு கள் இருப்பின் அவை எனது கேள்விச் சோர்வால் நிகழ்ந்தவை எனக் கருதி ஆன்றோர்கள் பொறுப்ப நுடன் எனக்கும் அதைத் தெரிவிப்பார்களேயானல் அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்ளுதற்குச் சித்த மாய் இருக்கிறேன். மூவர்சொலும் தமிழ் கேட்கும் முக்கட்பெருமான் யாவருக்கும் நலம் வழங்குவாராக.

சுபம்

திருச்சிற்றம்பலம்

இங்ஙனம்,

**தேவாரம் அ. நடேச தேசிகர்,**

பி. அ. தேவார பாடசாலை,

காரைக்குடி.

உ

குருபாதம்

# அணிந்துரை

சைவத் திருநெறி தமிழகத்தின் தவநெறி; தனி நெறி, காலத்தால் பழையது, இயல்பால் புதியது, கொள்கையால் முடிந்த முடிபாக விளங்குவது. உயிர்கள் துன்பத்தினின்றும் நீங்கி இன்பத்தை நுகரத்தக்க சாதனமாக இருப்பது சைவத் திருநெறியேயாம்.

சைவம் உயிர்; தமிழ் உடல்; சைவத் திருநெறியில் பண்டுதொட்டே தமிழ் மணம் கலந்துள்ளது. தமிழில் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே சைவத்தை விளக்கும் தமிழ் மறைகள் இருந்தன என்பதைத் தொல்காப்பியத்தால் அறியலாம். "இடையொடு சிவணிய-நரம்பின் மறைய என்மனார் புலவர்," "அளவிற்கோடல் அந்தணர் மறைத்தே" எனவும் தொல்காப்பியனார் கூறும் மறைகள் தமிழ் மறைகளேயாம். "நான்மறை முனிவர் என்றும் "நால்வேதநெறி" என்றும் புறநானூற்றில் பேசப்படுவதும், "பண்பொலி நான்மறை" என்றும் "முத்தமிழ் நான்மறை" என்றும் திருமுறைகளில் பேசப்படுவதும் பண்டைத் தமிழ் மறைகளே என்பது தெளிவு. அத்தமிழ் மறைகள் குமரி, கடல்

கொள்ளப்பட்ட காலத்து மறைந்திருக்க வேண்டும். அங்ஙனம் மறைந்த தமிழ் மறைகளின் கருத்தை எடுத்துரைக்கவே சைவ ஆசிரியர்கள் நால்வர் தோன்றி அருட்செம்பாடல்கள் அருளினராகலான். அவர்கள் அருட்பாடல்களாகிய தேவார திருவாசகங்களும், அவற்றின் வழிப்பட்ட ஏனைய திருமுறைகளும் தமிழ் மறை எனப்படும். இதனை உள்ளத்திற்கொண்ட நம்பியாண்டார் நம்பிகள் தேவாரத்தைப்பற்றிப் பேசும்பொழுது "இது என்றும் உளதாம்" என்று கூறியுள்ளார்.

இவ்வண்ணம் இன்று தமிழ் மறைகளாக, உள்ளுவார் உள்ளத்தில் உவட்டாமல் இனித்து இன்பம் பயப்பதோடன்றி உயிருக்குறுதியும் பயக்கும் உயர் மறைகளாக விளங்குகின்றவை தேவார திருவாசகங்கள், அவற்றினுள்ளும் முதல் ஏழு திருமுறை முறைகளாக வைத்து எண்ணப்படும் தேவாரம் பண்ணிசையும், பக்திச் சுவையும் மிக்கு விளங்குவதாம். தேவாரம் பண்ணமைதியோடு பாடப்பெற்றது. அதற்குரிய பண்முறைகளை ஏழிசையாய், இசையின் பயனாய் விளங்கும் இறைவனது அருளால் பாணர் குலத்துதித்த தவம் நிறை மங்கையொருத்தி வகுத்துத் தந்தாள். இங்ஙனம் அருமையாக இசையுடன் பாடவும், இன்பம் நுகரவும் இன்னிசைத் தேவாரப் பாக்கள் இருந்தும் இடைக் காலத்திலே தமிழ்மக்கள் வேற்று இசையிலே, வேற்றுப்பாட்டிலே நாட்டங் கொண்டனர். அதனால் நாளடைவில் தேவாரப் பண்ணிசை மக்களிடையில் நிலவுதல் குறைந்தது.

இன்று தேவாரம் ஓதுகின்றவரிற் சிலர் தம் மனம் போனவாறு பாடவேண்டிய முறைக்கு மாருகப் பாடுகின்றனர். இதனுல் தேவாரப் பண்களுக்கு அமைந்திருக்கும் பண்ணமைதி குலைவது உறுதி. தேவாரப் பண்களும், அப்பண்களுக்குரிய கட்டளை பேதங்களும் முன்னமேயே வரம்பு செய்யப்பெற்றுள்ளன. அவற்றைத் திருமுறை கண்ட புராணத்தால் அறியலாம். அதனை அறிந்து, பாடுவது பெரும் பயனைத் தரும். பண்களையும், அவற்றின் கட்டளை பேதங்களையும் உள்ளவாறு அறிய இந்நூல் தக்க கருவியாக இருக்கிறது. முறை பிறழ்ந்து இருக்கின்ற கட்டளை பேதங்களின் உண்மை முறையும், எண்ணிக்கையும் இந்நூலில் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளன. இந்நூலின் பிற்சேர்க்கையாக அமைந்திருக்கும் திருமுறைப் பதிப்புகளைப்பற்றிய குறிப்பு மிகுந்த பயனைத் தரக்கூடியது. இதுகாறும் வெளிவந்துள்ள பதிப்புகளில் பண்களைப்பற்றிய குறிப்புகளில் உள்ள மாற்றங்களையும், அவற்றின் உண்மையையும் பிற்சேர்க்கை மிக நன்ருக விளக்குகின்றது. பண்களையும், அவற்றின் கட்டளை பேதங்களையும் உணர்ந்து தமது அருமை மாணவர் நடேச தேசிகருக்கு உணர்த்திய சைவத் திரு. கீழ்வேளூர், சொக்கலிங்க தேசிகர் அவர்களுக்குச் சைவ உலகு பெரிதுங் கடமைப்பாடுடையது. தமது ஆசிரியப் பெருந்தகையின் வழிநின்று இதனை அச்சிட்டுச் சைவத் தமிழுலகுக்குக் கொடுக்கும் திரு. நடேச தேசிகரவர்களின் தொண்டை உளங்கனிந்த உள்ளத்துடன் வாழ்த்துகின்ருேம். இந்நூலைச் சிறந்த

முறையில் அச்சிட்டுக் கொடுக்க முன்வந்த செம் பொருட் செல்வர் திரு. ஆத. பழ. சிதம்பரஞ் செட் டியாரவர்கள் பொன்னும், பொருளும், போகமும் பெற்றுப் பொலிவெய்துவார்களாக. இந்நூலைக் கருத்தூன்றப் படித்துத் தேவாரத்தை முறையாகப் பண்ணொன்றப் பாடிப் பயன்பெற வேண்டும் என் பதே நமது விருப்பம்.

ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி
-: அருணாசல தேசிக சுவாமிகள்,
திருவண்ணாமலை ஆதீனம்,
குன்றக்குடி.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமுறை வரலாறு

சோழ மண்டலத்திலே திருவாரூரிலே சிவபக்தி அடியார் பக்திகளிற் சிறந்த அபயகுலசேகர சோழ மகாராஜா என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தமது அவைக்களத்திற்கு எழுந்தருளி வருஞ் சிவனடியார்கள் சமயாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்களுள் ஒன்றிரண்டு சொல்லக் கேட்டு ஆனந்த பரவசம் அடைவார். தேவாரத் திருமுறையை எங்கும் தேடி அகப்படாமையால் மனத்துயரங் கொண்டிருந்தார். இப்படி இருக்கும் நாளில்,

திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையாருக்குப் பூஜை செய்யும் ஆதி சைவர் ஒருவர், ஊருக்குச் செல்லவேண்டி இருந்தமையால், தமது புத்திரர் நம்பியாண்டார் நம்பியைப் பூஜை செய்யுமாறு ஆக்ஞாபித்துச் சென்றார். அவர் ஆக்ஞையின்படியே நம்பியாண்டார் நம்பி ஆலயஞ் சென்று விநாயகப் பெருமானுக்கு அபிடேக அலங்காரம் முதலானவைகளெல்லாஞ் செய்து, நைவேத்தியத்தைத் திருமுன் வைத்துத் திருவமுது செய்தருளுமாறு பிரார்த்தித்தார். விநாயகப்பெருமான் அமுது செய்யாதிருப்பக்

கண்டு, நம்பி மனம் வெம்பி, "எம்பெருமானே! அடியேன் நிவேதித்ததை அமுது செய்யாதிருப்பது என்னே? தேவரீர் அமுது செய்யாதொழியின் என் தலையைக் கல்லிலே மோதுவன்" என்று மோதப் புகுந்தார். "நம்பி, பொறு" என்று தடுத்துத் திருவமுதை எடுத்து உண்டார், பொல்லாப் பிள்ளையார்.

நம்பியாண்டார் நம்பி மனமகிழ்ந்து "எம்பெருமானே! அடியேன் இனிப் பள்ளிக்கு ஏகில், ஆசிரியர் அடிப்பர். தேவரீரே கலைகளை ஓதுவித்தல் வேண்டும்" என்று வேண்டினர். அதன்படியே பிள்ளையார் எல்லாக் கலைகளையும் ஓதுவித்தனர். இச்சமாசாரத்தைச் சோழமகாராஜா கேள்வியுற்று ஏராளமான சாமக்கிரியைகளை எடுத்துக்கொண்டு, திருநாரையூரை அடைந்து நம்பியாண்டார் நம்பியை வணங்கி, இவைகளை எல்லாம் விநாயகப்பெருமானுக்கு நிவேதித்தல் வேண்டுமென்று வேண்டினர். நம்பியாண்டார் நம்பி அவைகளை நாற்சுத்தி செய்து விநாயகப் பெருமானுக்குப் படைக்க, பிள்ளையார் துதிக்கையை நீட்டி எல்லாவற்றையும் திருவமுது செய்தருளினர்.

அதுகண்ட சோழ மகாராஜா மனமகிழ்ந்து, நம்பியை வணங்கி "சுவாமீ! மூவர் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கள் இருக்கும் இடம் தெரிய வேண்டும்" என்று வேண்டினர். நம்பியாண்டார் நம்பி விநாயகர்பாற் சென்று, இதை விண்ணப்பித்தார். விநாயகப் பெருமான் திருவுள்ளம் இசைந்து, "நம்பி! சிதம்பரத்திலே கனகசபைக்கு மேல்பால்

உள்ள ஓர் அறையிலே மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் இருக்கின்றன" என்று அருளிச் செய்தார். அதுகேட்ட நம்பி அரசர்பாற் சென்று அதை அவரிடம் தெரிவிக்க, அரசர் மகிழ்ந்து நம்பி யாண்டார்நம்பியோடு சிதம்பரத்தையடைந் . நடரா ஜப்பெருமானை வணங்கி, தில்லைவாழந்தணர்களை நோக்கி திருமுறைகள் இருக்கும் அறையைத் திறக்க வேண்டினர். அந்தணர்கள், "மகாராஜாவே! திரு முறைகள் வைத்தருளிய மூவர்கள் வந்தால் அறை திறக்கலாம்" என்றார்கள். அரசர் கேட்டு நடராஜப் பெருமானுக்கு விசேஷ பூஜைகள் செய்து சமயகுர வர்கள் மூவரையும் திருவுலாச்செய்து அறையின் முன் கொணர்வித்து, "மூவரும் வந்துவிட்டார்கள்; இனி, அதைத் திறக்கலாமே" என்றார். அந்தணர் கள் அரசர் புத்தியை வியந்து, அறை திறக்க அனு மதி செய்தார்கள்.

அரசர் அறையைத் திறந்து பார்க்கையில் திரு முறைகள் மீது வண்மீகம் மூடியிருப்பக் கண்டு மனம் நொந்து அவைகளை எடுத்துப் பார்க்கையில் அள வில்லாத ஏடுகள் பழுதாய் இருப்பக் கண்டு கண்ணீர் வாரச் சோகித்து நின்றார். அப்பொழுது இக்காலத் துக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் வைத்துவிட்டு, மற்றவைகளை மண்மூடச் செய்தோம் என்று ஓர் அசரீரி தோன்றக் கேட்டு, ஒருவாறு மனந்தெளிந்து தேவாரம் முதலிய அருட்பாக்களை எல்லாவற்றையும் திருமுறைகளாக வகுத்து அருளுமாறு நம்பியாண் டார் நம்பியை வேண்டினர்.

அவர் அதற்கு இசைந்து மூவர் அருளியதேவா ரத்தை ஏழு திருமுறைகளாகவும் மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் திருக்கோவையாரை எட்டாம் திருமுறையாகவும், திருமாளிகைத்தேவர் முதலான ஒன்பதின்மர் அருளிச்செய்த திருவிசைப்பா, திருப் பல்லாண்டு ஆகியவைகளை ஒன்பதாம் திருமுறையா கவும், திருமூலநாயனர் அருளிச்செய்த திருமந்திரத் தைப் பத்தாம் திருமுறையாகவும், திருவாலவாயுடை யார் திருமுகப்பாசுரம் முதலிய திவ்வியப் பிரபந்தங் களைப் பதினோராந் திருமுறையாகவும் வகுத்தரு ளினர்.

அதன் பின்னர் தேவாரப் பதிகங்களுக்குப் பண்ணடைவு பெருமையினலே எல்லோரும் திரு வெருக்கத்தம்புலியூரை அடைந்து ஆலயஞ்சென்று அண்ணலைப் பணிந்து தேவாரத் திருப்பதிகங்களுக் குப் பண்ணடைவை அருளிச்செய்தல் வேண்டும் என்று வேண்ட எல்லோரும் கேட்க "அன்பர்களே திருநீலகண்டப் பெரும்பாணர் மரபிலே பிறந்த வல்லி ஒருத்திக்கு இசைகள் வாய்ப்ப அளித்தோம்" என்று ஓர் அசரீரி தோன்றக் கேட்டு, அவளை அம் பலத்திற்கு அழைத்துவந்து, நடராஜப் பெருமான் திருமுன்னர் அவள் தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு அமைத்துப் பாடக் கேட்டார்கள். பின்னர் அரசர் பதினெரு திருமுறைகளையும் செப் பேடு செய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்தனர். அதனல் உயர் ஒப்பில்லாத சற்சமயமாகிய சைவ சமயம் எங்கும் தழைத்தோங்கிற்று-

உ
சிவமயம்

கொற்றவன்குடி
உமாபதி சிவாசாரிய சுவாமிகள்
அருளிச்செய்த

# திருமுறை கண்ட புராணம்

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா
மின்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கராகப் பண்ணின் மூன்றுளதா
முன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார்.

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகராகக் குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார்

காந்தார மாகியபியந் தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்
சேய்ந்தவகை யிரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளை மூன்றாக்கினர்.

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைசேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினர்.

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றென்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா
விரித்துரைத்தார்.

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையரு டுய்யமுறைக்
கிண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார்.

கூறரிய நட்டராகத் திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுந்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைதேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம்.

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கிற்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினர்.

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்றாக்கி யரனருளால் விரித்தமைத்தார்.

திருச்சிற்றம்பலம்.

| | பண்ணின் பெயர் | சம்பந்தர் கட்டளை | அப்பர் கட்டளை | சுந்தரர் கட்டளை | இராகத்தின் பெயர் |
|---|---|---|---|---|---|
| 1 | நட்டபாடை | 8 | 1 | 2 | நாட்டை |
| 2 | தக்கராகம் | 7 | 1 | 2 | காம்போதி |
| 3 | பழந்தக்கராகம் | 3 | 1 | ... | ஆரபி |
| 4 | தக்கேசி | 2 | 1 | 6 | காம்போதி |
| 5 | குறிஞ்சி | 5 | 1 | 2 | அரிகாம்போதி |
| 6 | வியாழக்குறிஞ்சி | 6 | 1 | ... | சவுராஷ்டிராம் |
| 7 | மேகராகக்குறிஞ்சி | 2 | 1 | ... | நீலாம்புரி |
| 8 | இந்தளம் | 4 | 1 | 2 | நாதநாமக்கிரியை |
| 9 | சீகாமரம் | 2 | 1 | 1 | நாதநாமக்கிரியை |
| 10 | காந்தாரம் | 3 | 1 | 2 | நவரோஸ் |
| 11 | நட்டராகம் | 2 | 1 | 2 | பந்துவராளி |
| 12 | செவ்வழி | 1 | 1 | ... | எதுகுலகாம்போதி |
| 13 | காந்தாரபஞ்சமம் | 3 | 1 | 1 | கேதாரகௌளை |
| 14 | கொல்லி | 4 | 1 | 3 | நவரோஸ் |
| 15 | கௌசிகம் | 2 | 1 | 2 | பைரவி |
| 17 | பஞ்சமம் | 1 | 1 | 1 | ஆகிரி |
| 16 | சாதாரி | 9 | 1 | ... | பந்துவராளி |
| 18 | புறநீர்மை | 1 | 1 | 2 | பௌளி |
| 19 | அந்தாளிக்குறிஞ்சி | 1 | 1 | ... | சாமா |
| 20 | பழம்பஞ்சுரம் | ... | ... | 2 | சங்கராபரணம் |
| 21 | செந்துருத்தி | ... | ... | 1 | மத்திமாவதி |
| 22 | நேரிசை | ... | 2 | ... | நவரோஸ் |
| 23 | குறுந்தொகை | ... | 1 | ... | நாதநாமக்கிரியை |
| 24 | திருத்தாண்டகம் | ... | 1 | ... | அரிகாம்போதி |
| | ஆகப் பண் 24 | 66 | 23 | 31 | மொத்தம் கட்டளை 120 |

நேரிசை, விருத்தம், குறுந்தொகை, தாண்டகம், அப்பருக்கும், பழம்பஞ்சுரம், செந்துருத்தி சுந்தரர்க்கும் உள்ளன. மற்றவர்களுக்கில்லை.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பண்முறைக் கட்டளை விளக்கம்

அநாதி முத்த சித்துருவாகிய முதற் கடவுள் சிவ
பெருமானே என்பதை ஆன்மாக்கள் உணர்ந்து அவரை
வழிபட்டு உய்யும்பொருட்டுப் பல அற்புதங்களினால்
சைவ சமயத்தை நிலைநாட்டியருளிய திருஞானசம்பந்த
சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி
சுவாமிகள் என்னும் சமயாசாரிய சுவாமிகள் மூவரால்
அருளிச் செய்யப்பெற்ற தென்றமிழ் வேதமாகிய தேவா
ரத் திருமுறைத் திருப்பதிகங்களுக்கு, நம்பியாண்டார்
நம்பிகளின் வேண்டுகோளுக் கிணங்க, திருநீலகண்ட
யாழ்ப்பாணரின் பரம்பரையில் தோன்றிய நங்கையொருத்
தியால் பண்ணடைவு வகுக்கப்பெற்ற தென்றும், அப்
பண்களுக்குரிய கட்டளைகள் இன்னின்னவை என்றும்,
கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அரு
ளிச்செய்த திருமுறைகண்ட புராணத்தால் அறிகின்றோம்.

அதில் திருஞானசம்பந்த சுவாமிகளின் திருமுறை
யில் நட்டபாடைப் பண்ணுக்கு 8 கட்டளைகளும், தக்கரா
கப் பண்ணுக்கு 7 கட்டளைகளும், பழந்தக்கராகப் பண்
ணுக்கு 3 கட்டளைகளும், தக்கேசிப் பண்ணுக்கு 2 கட்
டளைகளும், குறிஞ்சிப் பண்ணுக்கு 5 கட்டளைகளும்,
வியாழக்குறிஞ்சிப் பண்ணுக்கு 6 கட்டளைகளும், மேக
ராகக்குறிஞ்சிப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், இந்தளப்
பண்ணுக்கு 4 கட்டளைகளும், சீகாமரப் பண்ணுக்கு 2
கட்டளைகளும், * பியந்தையாகிய காந்தாரப் பண்ணுக்கு 3

---

* பியந்தைக் காந்தாரமென்பதைத் திருமுறைகண்ட புராணத்தின்
படி இருபெயரொட்டுப் பண்புத் தொகையாகக் கொள்ளுதல்
வேண்டும்.

கட்டளைகளும், நட்டராகப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், செவ்வழிப் பண்ணுக்கு 1 கட்டளையும், காந்தாரபஞ்சமப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், கொல்லிப் பண்ணுக்கு 4 கட்டளைகளும், கௌசிகப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், பஞ்சமப் பண்ணுக்கு 1 கட்டளையும், சாதாரிப் பண்ணுக்கு 9 கட்டளைகளும், புறநீர்மைப் பண்ணுக்கு 1 கட்டளையும், அந்தாளிக் குறிஞ்சிப் பண்ணுக்கு 1 கட்டளையும் கூறப்பெற்றுள்ளது.

திருநாவுக்கரசு சுவாமிகளின் திருமுறையில் மேலே திருஞானசம்பந்த சுவாமிகளின் பண்களாகச் சொல்லப் பெற்றுள்ள 19 பண்ணிற்கும், பண் ஒன்றிற்கு 1 கட்டளையாகவும், திருநேரிசை திருவிருத்தம் ஆகிய 2க்கும், கொல்லிப் பண் கட்டளை 2ம் திருக்குறுந்தொகைக்கு இந்தளப்பண் கட்டளை 1ம், திருத்தாண்டகத்துக்குக் குறிஞ்சிப் பண் கட்டளை 1ம் ஆகப் பண் 22க்குக் கட்டளைகள் 23 என்று கூறப்பெற்றுள்ளது.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருமுறையில் இந்தளப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், தக்கராகப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், நட்டராகப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், கொல்லிப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், பழம்பஞ்சுரப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், தக்கேசிப் பண்ணுக்கு 6 கட்டளைகளும், காந்தாரப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், காந்தார பஞ்சமப் பண்ணுக்கு 1 கட்டளையும், நட்டபாடைப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், புறநீர்மைப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், சீகாமரப் பண்ணுக்கு 1 கட்டளையும், குறிஞ்சிப் பண்ணுக்கு 2 கட்டளைகளும் செந்துருத்திப் பண்ணுககு 1 கட்டளையும், கௌசிகப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், பஞ்சமப் பண்ணுக்கு 1 கட்டளையும், ஆக 15 பண்களுக்கு 31 கட்டளைகள் கூறப்பெற்றுள்ளது.

தேவாரத் திருமுறைகளை இதுவரை அச்சிற் பதிப்பித்த அனைவரும் பற்பல பதிகங்களுக்கு உரிய பண்கள் இன்னவை என்று திட்டமாக அறிந்துகொள்ள முடியாத நிலையில் ஒரு பண்ணை மற்றொரு பண்ணாகவும், யாப்பின் பெயராக உள்ள இயமகம், எழுகூற்றிருக்கை, மாலை மாற்று, ஈரடிமேல் வைப்பு, நாலடி மேல் வைப்பு முதலியவற்றைப் பண்ணின் பெயராகவும், ஒரு ஆசிரியரது திருமுறையில் குறிக்கப்பெறாத பண்கள் சிலவற்றை, அவ்வாசிரியரது பதிகங்களுக்குக் குறித்தும் அச்சிட்டுள்ளார்கள். அவ்வாறு அச்சிட்ட பிரதிகள் சிலவற்றுள் ஒன்றற்கொன்று மாறுபாடுடைய தலைப்புக்கள் கொடுக்கப்பெற்றிருப்பதைப் பின்சேர்க்கையில் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது.

திருமுறைகண்ட புராணத்தில் கொல்லிக் கௌவாணம் என்ற பெயரில் பண் கூறப்பெறவில்லை. அச்சுப் பதிப்புக்களில் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் கொல்லிக் கௌவாணப் பண் குறிக்கப்பெற்றுள்ளது.

அச்சுப் பிரதிகள் ஒன்றற்கொன்று சிற்சில மாறுபாடுகள் உடையனவாயிருத்தல்பற்றிப் பண்முறை விளக்கம் ஏதேனும் ஒரு பதிப்பை அடிப்படையாகக்கொண்டுதான் செய்யவேண்டுவதாயிருப்பது கருதி, சைவசித்தாந்த மகாசமாசம் பண்முறைத் திருமுறைப் பதிப்பை வைத்துக்கொண்டு அதில் காணப்பெற்றுள்ள பண்முறை அமைதிகளையும் மாற்றங்களையும் இதில் விளக்கி இருக்கிறது.

## இப்போது அச்சுப் பிரதிகளில் காணப்பெறுகின்ற கட்டளைகள் வருமாறு :

மேற்கண்ட சமாசப் பதிப்பில் திருஞானசம்பந்த சுவாமிகளின் திருமுறையில் நட்டபாடைப் பண்ணுக்கு 4

கட்டளைகளும், தக்கராகப் பண்ணுக்கு 7 கட்டளைகளும், பழந்தக்கராகப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், தக்கேசிப் பண்ணுக்கு 1 கட்டளையும், குறிஞ்சிப் பண்ணுக்கு 4 கட்டளைகளும், வியாழக்குறிஞ்சிப் பண்ணுக்கு 5 கட்டளைகளும், மேகராகக் குறிஞ்சிப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், இந்தளப் பண்ணுக்கு 5 கட்டளைகளும், சீகாமரப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், காந்தாரப் பண்ணுக்கு 8 கட்டளைகளும், பியந்தைக் காந்தார மென்ற பெயரில் 2 கட்டளைகளும், நட்டராகப் பண்ணுக்கு 4 கட்டளைகளும், செவ்வழிப் பண்ணுக்கு 1 கட்டளையும், காந்தார பஞ்சமப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், கொல்லிப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், கொல்லிக் கௌவாணத்துக்கு 1 கட்டளையும், கௌசிகப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், பஞ்சமப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், சாதாரிப்பண்ணுக்கு 5 கட்டளைகளும், பழம்பஞ்சுரப் பண்ணுக்கு 6 கட்டளைகளும், புறநீர்மைப் பண்ணுக்கு 1 கட்டளையும், அந்தாளிக் குறிஞ்சிப் பண்ணுக்கு 1 கட்டளையுமாகக் குறிக்கப்பெற்றுள்ளன.

அப்பர் சுவாமிகளின் திருமுறையில் கொல்லிப் பண்ணுக்கு 1 கட்டளையும், காந்தாரப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், பியந்தைக் காந்தார மென்ற பெயரில் 1 கட்டளையும், சாதாரிப் பண்ணுக்கு 1 கட்டளையும், காந்தார பஞ்சமப் பண்ணுக்கு 1 கட்டளையும், பழந்தக்கராகப் பண்ணுக்கு 1 கட்டளையும், பழம்பஞ்சுரப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், இந்தளப் பண்ணுக்கு 1 கட்டளையும், சீகாமரப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், குறிஞ்சிப் பண்ணுக்கு 1 கட்டளையும், நேரிசைக் கொல்லிப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், குறுந்தொகைப் பண்ணுக்கு 1 கட்டளையும், திருத்தாண்டகப் பண்ணுக்கு 1 கட்டளையுமாகக் குறிக்கப்பெற்றுள்ளன.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருமுறையில் இந்தளப் பண்ணுக்கு 7 கட்டளைகளும், தக்கராகப் பண்ணுக்கு

3 கட்டளைகளும், நட்டராகப் பண்ணுக்கு 4 கட்டளைக ளும், கொல்லிப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், கொல்லிச் சௌவாணம் என்ற பெயரில் 4 கட்டளைகளும், பழம்பஞ்சு ரப் பண்ணுக்கு 3 கட்டளைகளும், தக்கேசிப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், காந்தாரப் பண்ணுக்கு 4 கட்டளைக ளும், பியந்தைக் காந்தார மென்ற பெயரில் 1 கட்டளை யும், காந்தார பஞ்சமப் பண்ணுக்கு 1 கட்டளையும், நட்ட பாடைப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், புறநீர்மைப் பண் ணுக்கு 2 கட்டளைகளும், சீகாமரப் பண்ணுக்கு 2 கட் டளைகளும், குறிஞ்சிப் பண்ணுக்கு 2 கட்டளைகளும், கௌசிகப் பண்ணுக்கு 1 கட்டளையும், செந்துருத்திப் பண்ணுக்கு 1 கட்டளையும், பஞ்சமப் பண்ணுக்கு 2 கட் டளைகளும் குறிக்கப்பெற்றுள்ளன.

## கட்டளைகள் இருக்கவேண்டிய முறை வருமாறு.

திருஞானசம்பந்த சுவாமிகள் நட்டபாடைப்பண் கட்டளை (8) க்கு இப்பொழுது காணப்பெறுகின்ற (4) கட் டளைகளுடன் திருஇயமகத்திலிருந்து (3) கட்டளைகளும் காந்தாரத்திலிருந்து (1) கட்டளையும் சேர்க்கப்பெற்றுள் ளன. தக்கேசிப்பண் கட்டளை (2) க்கு இப்பொழுது காணப்பெறுகின்ற (1) கட்டளையுடன் காந்தாரத்தில் அதிக மாயிருந்த கட்டளை (1)ஐ சேர்க்கப்பெற்றுள்ளன. குறிஞ் சிப்பண் கட்டளை (5)க்கு இப்பொழுது காணப்பெறுகின்ற (4) கட்டளையுடன் காந்தாரத்தில் அதிகமாயிருந்த கட்டளை (1)ஐ சேர்க்கப்பெற்றுள்ளன. வியாழக்குறிஞ்சி பண் கட் டளை (6)க்கு இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (5) டன் யாழ்மூரிப்பண் என்று குறிக்கப்பெற்றுள்ளதை அத்துடன் சேர்க்கப்பெற்றுள்ளன. இந்தளப்பண் கட் டளை (4)க்கு இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (5)ல் அதிகமாயிருந்த ஒன்றை கொல்லிப்பண்ணுடன் சேர்க் கப்பெற்றுள்ளன. கொல்லிப்பண் கட்டளை (4)க்கு இப் பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (3)டன் இந்தள

தில் அதிகமாயிருந்த கட்டளை (1) ஐ சேர்க்கப்பெற்றுள்ளன. சாதாரிப்பண் கட்டளை (9)க்கு இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (5)டன் பழம்பஞ்சுரத்திலிருந்து கட்டளை (1)ம் நாலடிமேல்வைப்பிலிருந்து கட்டளை (1)ம் ஈரடிமேல்வைப்பிலிருந்து கட்டளை (1)ம் மாலை மாற்று என்ற பெயரில் கட்டளை (1)ம் சேர்க்கப்பெற்றுள்ளன.

கட்டளை ஒற்றுமை கருதி நட்டராகப்பண் (1)ஐ நட்டபாடைப் பண்ணிலும் காந்தாரப்பண் (1)ம் பஞ்சமப் பண் (4)ம் சீகாமரப்பண்ணுடனும் பியந்தைக் காந்தாரம் கொல்லிக் கவ்வாணம் என்று பண்ணுக்குப் பெயரில்லை ஆதலால் அப்பெயருள்ள (15) பண்களைக் காந்தாரத்திலும் நட்டராகப்பண் (1)ஐ காந்தார பஞ்சமத்திலும் கௌசிகப்பண் (1)ஐ பஞ்சமத்திலும் சேர்க்கப்பெற்றுள்ளன

## இனி திருநாவுக்கரசு சுவாமிகளின் கட்டளை முறை வருமாறு

திருநாவுக்கரசு சுவாமிகளின் பண்கள் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு கூறப்பெற்றபடி ஒவ்வொரு கட்டளைகளை உடைய (19) பண்களாகவும் அவருக்குத் தனிமையாயுள்ள நேரிசைக் கொல்லி, விருத்தக்கொல்லி, குருந்தொகை யிந்தளம். தாண்டகக் குறிஞ்சி ஆகிய ஒவ்வொரு கட்டளைகளையுடைய (4) பண்களாகவும் இருத்தல் வேண்டும். கொல்லிகாந்தாரம், சாதாரி, காந்தார பஞ்சமம், பழந்தக்க ராகம், இந்தளம், சீகாமரம், குறிஞ்சி ஆகிய பண்களில் ஒவ்வொரு கட்டளைகள் இருக்க, காந்தாரப் பண்ணில் அதிகமாயிருக்கும் கட்டளை (2)ல் ஒன்றை மேகராகக் குறிஞ்சிக்கும், மற்றொன்றை செவ்வழிக்கும் சேர்க்கப்பெற்றுள்ளன. பியந்தைக் காந்தாரமென்று பெயரே இல்லாமையால், அப்பெயர் குறித்த பண்ணை நட்டபாடைப் பண்ணுகச் சேர்க்கப்பெற்றுள்ளன. பழம்பஞ்சுரப்பண் அப்பர் சுவாமிகளுக்கு இல்லை. ஆகையால் அப்பண்ணின்

கட்டளைகள் (2)ல் ஒன்றைப் புறநீர்மைப் பண்ணாகவும், மற்றொன்றை நட்டராகப் பண்ணாகவும் சேர்க்கப்பெற்றுள் ளன. சீகாமரப்பண் கட்டளை அதிகமாயிருந்த (1)ஐத் தக்க ராகப் பண்ணாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

இங்கு குறிக்கப்பெற்றுள்ள பண்கள் தவிர, குறிக்கப் படவேண்டிய பண்களில் பஞ்சமப்பண்ணுக்குக்காந்தாரப் பண்ணிலிருந்தும், கௌசிகப்பண்ணுக்குக் காந்தார பஞ்ச மப் பண்ணிலிருந்தும், தக்கேசிப் பண்ணுக்குப் பழந்தக்க ராகப் பண்ணிலிருந்தும், அந்தாளிக் குறிஞ்சிப் பண்ணுக்கு இந்தளப்பண்ணிலிருந்தும், வியாழக்குறிஞ்சிப் பண்ணுக்கு இந்தளப் பண்ணிலிருந்தும் ஒவ்வொரு கட்டளைகள் உரி யனவாக ஆக்கப்பெற்றுள்ளன.

## இனி சுந்தரமூர்த்தி சுவாமிகளின் கட்டளை முறை வருமாறு

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் இந்தளப் பண்ணில் இப் பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (7)ல் இருக்கவேண் டிய கட்டளை (2) தவிரத் தக்கேசிப்பண்ணுக்கு (2) கட்டளை களும், நட்டபாடைப் பண்ணுக்கு (1) கட்டளையும், கௌசி கப்பண்ணுக்கு (1) கட்டளையும், செந்துருத்திப் பண்ணுக்கு (1) கட்டளையும் சேர்க்கப்பெற்றுள்ளன. தக்கராகப் பண் ணில் இப்பெழுது காணப்பெறுகின்ற (3) கட்டளைகளுக்கு இருக்கவேண்டிய கட்டளை (2) தவிர (1)ஐக் கொல்லிப்பண் ணுடன் சேர்க்கப்பெற்றுள்ளது. நட்டராகப் பண்ணில் இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளைகள் (4)ல் இருக்க வேண்டிய கட்டளை (2) தவிர (1)ஐக் கொல்லிப்பண்ணிலும்,

மற்ரென்றைக் குறிஞ்சிப் பண்ணிலும் சேர்க்கப்பெற்றுள்ளது. கொல்லிக்கவ்வாணம் என்ற பெயரில் பண் இல்லை. ஆதலால் அப்பெயரிலுள்ள (4) கட்டளைகளில் (2)ஐக்கொல்லிப்பண்ணிலும்,(1)ஐத்தக்கேசிப்பண்ணிலும், மற்ரென்றை இந்தளப்பண்ணிலும் சேர்க்கப்பெற்றுள்ளன. பழம்பஞ்சுரப்பண்ணில் இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (3)ல் இருக்கவேண்டிய கட்டளை (2) தவிர (1)ஐ நட்டபாடைப் பண்ணுடன் சேர்க்கப்பெற்றுள்ளது. தக்கேசிப் பண்ணுக்கு இப்பொழுது இருக்கிற கட்டளை (2)உடன் இருக்கவேண்டிய கட்டளை (6)க்குப் பாக்கி இந்தளத்தில் அதிகமாயிருந்த (2) கட்டளைகளும், கொல்லிக்கவ்வாணம் என்ற பெயரில் இருந்தகட்டளை (1)ம் சீகாமரத்திலிருந்து(1) கட்டளையும் சேர்க்கப்பெற்றுள்ளன.காந்தாரப்பண்ணுக்கு இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (4)ல் இருக்கவேண்டிய கட்டளை (2)தவிர (1)ஐக் கௌசிகப்பண்ணிலும், மற்ரென்றைக் குறிஞ்சிப்பண்ணிலும் சேர்க்கப்பெற்றுள்ளன. பியந்தைக் காந்தாரம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இல்லை. ஆதலால் இப்பெயருள்ள பண்ணைக் காந்தாரப்பண்ணுடன் சேர்க்கப்பெற்றுள்ளது. சீகாமரப்பண்ணுக்கு இப்பொழுது காணப்பெறுகின்ற கட்டளை (2)ல் இருக்கவேண்டிய கட்டளை (1) தவிர மற்ரென்றைத் தக்கேசிப் பண்ணில் சேர்க்கப்பெற்றுள்ளது. கௌசிகப்பண்ணுக்கு இப்பொழுதுள்ள கட்டளை (1) உடன் இருக்கவேண்டிய கட்டளை (2)க்குப் பாக்கி (1)ஐப் பஞ்சமப்பண்ணிலிருந்து சேர்க்கப்பெற்றுள்ளது. பஞ்சமப் பண்ணுக்கு இப்பொழுது காணப்பெறுகிற கட்டளை (2)க்கு இருக்கவேண்டிய கட்டளை (1) தவிர மற்ரென்றைக் கௌசிகப்பண்ணுடன் சேர்க்கப்பெற்றுள்ளது.

கட்டளை ஒற்றுமை கருதிக்கொல்லியிலுள்ள (2) பண்களைத் தக்கராகத்திலும், நட்டராகத்திலும் சேர்த்தும் நட்டராகப்பண் (1)ஐ நட்டபாடைப் பண்ணுடன் சேர்த்தும் குறிஞ்சிப்பண் (2)ஐக் கௌசிகப்பண்ணுடன் சேர்த்தும், காந்தாரப்பண் (1)ஐக் குறிஞ்சிப்பண்ணுடன் சேர்த்தும் இருக்கிறது.

மேலே சொல்லப்பெற்ற பண்களின் கட்டளைகளெல்லாம் திருமுறைகண்ட புராணத்தில் சொல்லியபடி சேர்க்கப்பெற்றவையாம்.

இங்ஙனம்,
**தேவாரம் அ. நடேச தேசிகர்,**
காரைக்குடி.



## திருமுறைப் பதிப்புக்களில் காணப்

| பதிகத் தலைப்பு | இராமசாமி பிள்ளை | செந்தில்வேலு முதலியார் | |
|---|---|---|---|
| யாமாமாநீ | மாலைமாற்று | கௌசிகம் | |
| ஒருருவாயினை | திருவெழுக் கூற்று | வியாழக்குறிஞ்சி | |
| உற்றுமை | இயமகம் | கௌசிகம் | |
| வேதவேள்வி | சாலடிமேல் வைப்பு | பழம்பஞ்சுரம் | |
| ஆலநீழல் | இயமகம் | இயமகம் | |
| பாயுமால் | இயமகம் | இயமகம் | |
| துன்றுகொன்றை | இயமகம் | இயமகம் | |
| பரசுபாணியர் | சரடிமேல்வைப்பு | பழம்பஞ்சுரம் | |
| வேலினேர் | சரடிமேல்வைப்பு | சரடிமேல் வைப்பு | |
| வரமதே | சரடிமேல்வைப்பு | சரடிமேல் வைப்பு | |
| மாதர்மடப்பிடி | யாழ்மூரி | மேகராகக் குறிஞ்சி | |
| மண்ணது | பண்போடவில்லை | பண்போடவில்லை | |

★ இக்குறியிட்ட பண்கள் ஏனைய பண்களி
கப்பெற்றிருப்பதில் கண்டுகொள்ளவும். அன்றியும்
திருத்தாண்டகம் ஆகிய நான்கு பண்களும் அப்பர்
செந்துருத்தி இவ்விரண்டு பண்களும் சுந்தரமூர்த்தி
சம்பந்த சுவாமிகளுக்கு இப்பண்கள் கூறப்பெற

## பெறும் சில பண் மாறுபாடுகள்.

| நமசிவாய முதலியார் | சைவசித்தாந்தக் கழகம் | சாமிநாதபண்டிதர் | கட்டளை விளக்கத்தின்படி |
|---|---|---|---|
| மாலைமாற்று | கௌசிகம் | கௌசிகம் | சாதாரி |
| திருவெழுக்கூற்ற | வியாழக்குறிஞ்சி | வியாழக்குறிஞ்சி | வியாழக்குறிஞ்சி |
| இயமகம் | பழம்பஞ்சுரம் | பழம்பஞ்சுரம் | நட்டபாடை |
| ஈரடிமேல் வைப்பு | ஷை | ஷை | சாதாரி |
| இயமகம் | ஷை | திருவியமகம் | நட்டபாடை |
| இயமகம் | ஷை | ஷை | நட்டபாடை |
| இயமகம் | ஷை | ஷை | நட்டபாடை |
| ஈரடிமேல் வைப்பு | ஷை | பழம்பஞ்சுரம் | சாதாரி |
| ஈரடிமேல் வைப்பு | ஷை | ஈரடி | சாதாரி |
| ஈரடிமேல் வைப்பு | ஷை | பழம்பஞ்சுரம் | சாதாரி |
| யாழ்மூரி | யாழ்மூரி | யாழ்மூரி | வியாழக்குறிஞ்சி |
| பண்போடவில்லை | பழம்பஞ்சுரம் | பண்போடவில்லை | சாதாரி |

*விருந்து சேர்க்கப்பெற்றிருப்பதை ஆங்காங்கு குறிக் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, சுவாமிகளுக்கு மாத்திரம் உரியன. பழம்பஞ்சுரம், சுவாமிகளுக்கு மாத்திரம் உரியன. திருஞான வில்லை என்பதை அறிக.*

உ
சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்
அருளிச்செய்த

# முதல் திருமுறை

திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை (கட்டளை 8)

முதலாவது கட்டளை

தோடுடையசெவியன்விடையேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே.

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தன் னுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே.

திருப்புகலியும், திருவீழிமிழலையும் - பண் - நட்டபாடை
2-வது கட்டளை

மைம்மருபூங்குழற்கற்றைதுற்றவா ளுதன்மான்விழி மங்கையோடும், பொய்மொழியாமறையோர்களேத்தப் புகலிநிலாவியபுண்ணியனே, எம்மிறையேயிமையாதமுக் கணீசவெனேசவிதென்கொல்சொல்லாய், மெய்ம்மொழி நான்மறையோர்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

விண்ணிழிகோயில்விரும்பிமேவும்வித்தகமென்கொலி தென்றுசொல்லிப், புண்ணியனைப்புகலிந்நிலாவுபூங்கொடி யோடிருந்தானைப்போற்றி, நண்ணியகீர்த்திநலங்கொள் கேள்விநான்மறைஞானசம்பந்தன்சொன்ன, பண்ணியல் பாடல்வல்லார்களிந்தப்பாரொடுவிண்பரிபாலகரே.

### வேணுபுரம் - பண் - நட்டபாடை

### 3-வது கட்டளை

வண்டார்குழலரிவையொடுபிரியாவகைபாகம்
பெண்டான்மிகவானான்பிறைச்சென்னிப்பெருமானூர்
தண்டாமரைமலராளுறைதவளந்நெடுமாடம்
விண்டாங்குவபோலும்மிகுவேணுபுரமதுவே.

வேதத்தொலியாலும்மிகுவேணுபுரந்தன்னைப்
பாதத்தினின்மனம்வைத்தெழுபந்தன்றனபாடல்
ஏதத்தினையில்லாவிவைபத்தும்மிசைவல்லார்
கேதத்தினையில்லார்சிவகெதியைப்பெறுவாரே.

### திருமறைக்காடு - பண் - நட்டபாடை

### 4-வது கட்டளை

சிலைதனைநடுவிடைநிறுவியொர்சினமலியரவதுகொடுதிவி
தலமலிசுரரசுரர்களொலிசலசல்கடல்கடைவுழிமிகு
கொலைமலிவிடமெழவவருடல்குலைதரவதுநுகர்பவனெழில்
மலைமலிமதில்புடைதழுவியமறைவனமமர்தருபரமனே.

வசையறுமலர்மகணிலவியமறைவனமமர்பரமனைநினை
பசையொடுமிகுகலைபலபயில்புலவர்கள்புகழ்வழிவளர்தரு
இசையமர்கழுமலநகரிறைதமிழ்விரகனதுரையியல்வல
இசைமலிதமிழொருபதும்வலவவருலகினிலெழில்
பெறுவரே.

## திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை

### 5-வது கட்டளை

★ உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருண் மெய்யினையே, கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழி காய்வதுகாமனையே, அற்றமறைப்பதுமுன்பணியே யமரர்கள்செய்வதுமுன்பணியே, பெற்றுமுகந்ததுகந் தனையேபிரமபுரத்தையுகந்தனையே.

பருமதின்மதுரைமன்னவையெதிரேபதிகமதெழுதிலை யவையெதிரே, வருநதியிடைமிசைவருகரனேவசையொடு மலர்கெடவருகரனே, கருதலின்மிசைமுரறருமருளேகழுமல மமரிறைதருமருளே, மருவியதமிழ்விரகனமொழியேவல்ல வர்தம்மிடர்திடமொழியே.

## திருவீழிமிழலை - பண் - நட்டபாடை

### 6-வது கட்டளை

★ துன்றுகொன்றைநஞ்சடையதேதூயகண்டநஞ்சடையதே
கன்றின்மானிடக்கையதேகல்லின்மானிடக்கையதே
என்றுமேறுவதிடவமேயென்னிடைப்பலியிடவமே
நின்றதும்மிழலையுள்ளுமேநீரெனைச்சிறிதுமுள்ளுமே.

மேயசெஞ்சடையினப்பனேமிழலைமேவியவெனப்பனே
ஏயுமாசெயவிருப்பனேயிசைந்தவாசெயவிருப்பனே
காயவர்க்கசம்பந்தனேகாழிஞானசம்பந்தனே
வாயுரைத்ததமிழ்பத்துமேவல்லவர்க்குமிவைபத்துமே.

## திருவாலவாய் - பண் - நட்டபாடை

### 7-வது கட்டளை

★ ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கை யே, பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோத

---

★ இக்குறியிட்ட பண்கள் வேறு பண்களிலிருந்து சேர்க்கப் பெற்றவை.

லர்சேர்புரபங்கனே, கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே, ஆலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே.

ஈனஞானிகடம்மொடுவிரகனேயேறுபல்பொருண்முத்தமிழ்விரகனே, ஆனகாழியுண்ஞானசம்பந்தனேயாலவாயினின்மேயசம்பந்தனே, ஆனவானவர்வாயினுளத்தனேயன்பரானவர்வாயினுளத்தனே, நானுரைத்தனசெந்தமிழ்பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்பத்துமே.

### சீர்காழி - பண் - நட்டபாடை

### 8-வது கட்டளை

★ விண்ணியங்குமதிக்கண்ணியான்விரியுஞ்சடைப்
பெண்ணயங்கொடிருமேனியாம்பெருமானனற்
கண்ணயங்கொடிருநெற்றியான்கலிக்காழியுள்
மண்ணயங்கொண்மறையாளரேத்துமலர்ப்பாதனே.

கண்ணுமூன்றுடையாதிவாழ்கலிக்காழியுள்
அண்ணலந்தண்ணருள்பேணிஞானசம்பந்தன்சொல்
வண்ணமூன்றுந்தமிழிற்றெரிந்திசைபாடுவார்
விண்ணுமண்ணும்விரிகின்றதொல்புகழாளரே.

---

### திருக்கோலக்கா - பண் - தக்கராகம் (கட்டளை 7)

### முதலாவது கட்டளை

மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீழ்
உடையுங்கொண்டவுருவமென்கொலோ.

நலங்கொள்காழிஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையார்
உலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே.

## திருப்பாம்புரம் - பண் - தக்கராகம்
## 2-வது கட்டளை

சீரணிதிகழ்திருமார்பில்வெண்ணூலர்திரிபுரமெரிசெய்த செல்வர், வாரணிவனமுலைமங்கையோர்பங்கர்மான்மறி யேந்தியமைந்தர்,காரணிமணிதிகழ்மிடறுடையண்ணல்கண் ணுதல்விண்ணவரேத்தும், பாரணிதிகழ்தருநான்மறையா ளர்பாம்புரநன்னகராரே.

பார்மலிந்தோங்கிப்பருமதில்சூழ்ந்தபாம்புரநன்னகரா ரைக், கார்மலிந்தழகார்கழனிசூழ்மாடக்கழுமலமுதுபதிக் கவுணி, நார்மலிந்தோங்குநான்மறைஞானசம்பந்தன்செந் தமிழ்வல்லார், சீர்மலிந்தழகார்செல்வமதோங்கிச்சிவனடி நண்ணுவர்தாமே.

## சீர்காழி - பண் - தக்கராகம்
## 3-வது கட்டளை

அடலேறமருங்கொடியண்ணல்
மடலார்குழலாளொடுமன்னுங்
கடலார்புடைசூழ்தருகாழி
தொடர்வாரவர்தூநெறியாரே.

நலமாகியஞானசம்பந்தன்
கலமார்கடல்சூழ்தருகாழி
நிலையாகநினைந்தவர்பாடல்
வலரானவர்வானடைவாரே.

## திருவேட்களம் - பண் - தக்கராகம்
## 4-வது கட்டளை

அந்தமுமாதியுமாகியவண்ணலாரழலங்கையமர்ந்திலங்க
மந்தமுழவமியம்பமலைமகள்காணநின்றாடிச்
சந்தமிலங்குநகுதலைகங்கைதண்மதியம்மயலேததும்ப
வெந்தவெண்ணீறுமெய்பூசும்வேட்களநன்னகராரே.

விண்ணியன்மாடம்விளங்கொளிவிதிவெண்கொடியெங்குஞ்சிரிந்திலங்க, நண்ணியசீர்வளர்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன், பெண்ணினல்லாளொருபாகமமர்ந்துபேணியவேட்களமேன்மொழிந்த, பண்ணியல்பாடல்வல்லார்கள்பழியொடுபாவமிலாரே.

## திருக்கற்குடி - பண் - தக்கராகம்

### 5-வது கட்டளை

தடந்திகழ்மென்முலையாளைப்பாகமதாகமதித்துத்
தடந்திரைசேர்புனன்மாதைத்தாழ்சடைவைத்தசதுரர்
இடந்திகழ்முப்புரிநூலர்துன்பமொடின்பமதெல்லாம்
கடந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே.

காமருவார்பொழில்சூழுங்கற்குடிமாமலையாரை
நாமருவண்புகழ்க்காழிநலந்திகழ்ஞானசம்பந்தன்
பாமருசெந்தமிழ்மாலைபத்திவைபாடவல்லார்கள்
பூமலிவானவரோடும்பொன்னுலகிற்பொலிவாரே.

## திருவாலங்காடு - பண் - தக்கராகம்

### 6-வது கட்டளை

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே.

சாந்தங்கமழ்மறுகிற்சண்பைஞானசம்பந்தன்
ஆந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை
வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே.

## திருவதிகை வீரட்டானம் - பண் - தக்கராகம்

### 7-வது கட்டளை

குண்டைக்குறட்பூதங்குழுமவனலேந்திக்
கெண்டைப்பிறழ்தெண்ணீர்க்கெடிலவடபக்கம்
வண்டுமருள்பாடவளர்பொன்விரிகொன்றை
விண்டதொடையலானுடும்விரட்டானத்தே.

ஞாழல்கமழ்காழியுண்ஞானசம்பந்தன்
வேழம்பொருதெண்ணீரதிகைவிரட்டானத்துச்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை
வாழுந்துணையாகநினைவார்வினையிலரே.

---

## திருநள்ளாறு - பண் - பழந்தக்கராகம் (கட்டளை 3)

### முதலாவது கட்டளை

போகமார்த்தபூண்முலையாடன்னுேடும்பொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
ஆகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மேல்
நாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே.

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லார்
உண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே.

## திருவோத்தூர் - பண் - பழந்தக்கராகம்

### 2-வது கட்டளை

பூத்தேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி
ஏத்தாதாரில்லையெண்ணுங்கால்
ஒத்தூர்மேயவொளிமழுவாளங்கைக்
கூத்தீரும்மகுணங்களே.

குரும்பையாண்பனையின்குலையோத்தூர்
அரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுண்ஞானசம்பந்தன்சொல்
விரும்புவார்வினைவீடே.

## திருத்தூங்கானைமாடம் - பண் - பழந்தக்கராகம்

### 3-வது கட்டளை

ஒடுங்குப்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்கையொழியத்தவம், அடங்கும்மிடங்கருதிநின்றீரெல்லாமடிகளடிநிழற்கீழாளாம்வண்ணம், கிடங்கும்மதிலுஞ்சுலாவியெங்குங்கெழுமனைகடோறுமறையின்னொலி, தொடங்குங்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே.

மண்ணார்முழவதிருமாடவீதிவயற்காழிஞானசம்பந்தனல்ல, பெண்ணாகடத்துப்பெருங்கோயில்சேர்பிறையுரிஞ்சுந்தூங்கானைமாடமேயான், கண்ணார்கழல்பரவுபாடல்பத்துங்கருத்துணரக்கற்றாருங்கேட்டாரும்போய், விண்ணோருலகத்துமேவிவாழும்விதியதுவேயாகும்வினைமாயுமே.

---

## திருவண்ணமலை - பண் - தக்கேசி (கட்டளை 2)

### முதலாவது கட்டளை

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்
மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார்[கள்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடும்
ஆமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணமலையாரே.

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே.

## திருவறையணி நல்லூர் - பண் - தக்கேசி

### 2-வது கட்டளை

★பீடினாற்பெரியோர்களும்பேதைமைகெடத்தீதிலா
விடினாலுயர்ந்தார்களும்விடிலாரிளவெண்மதி
சூடினார்மறைபாடினார்சுடலைநீறணிந்தாரழல்
ஆடினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே.

கழியுலாங்கடற்கானல்சூழ்கழுமலமமர்தொல்பதிப்
பழியிலாமறைஞானசம்பந்தனல்லதோர்பண்பினார்
மொழியினாலறையணிநல்லூர்முக்கண்மூர்த்திதன்றாடொழக்
கெழுவினாரவர்தம்மொடுங்கேடில்வாழ்பதிபெறுவரே.

---

## திருவேங்குரு - பண் - குறிஞ்சி (கட்டளை 5)

### முதலாவது கட்டளை

காலைநன்மாமலர்கொண்டடிபரவிக்கைதொழுமாணியைக்கறுத்தவெங்காலன், ஓலமிடமுன்னுயிரொடுமாளவுதைத்தவனுமையவள்விருப்பனெம்பெருமான், மாலைவந்தணுகவோதம்வந்துலவிமறிதிரைசங்கொடுபவளமுமுந்தி, வேலைவந்தணையுஞ்சோலைகள்சூழ்ந்தவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே.

விண்ணியல்விமானம்விரும்பியபெருமான்வெங்குருமேவியுள்வீற்றிருந்தாரை, நண்ணியநூலன்ஞானசம்பந்தனின்றமிழ்வாய்மொழிநலமிகுபத்தும், பண்ணியல்பாகப்பத்திமையாலேபாடியுமாடியும்பயிலவல்லோர்கள், விண்ணவர்விமானங்கொடுவரவேறிவியனுலகாண்டுவீற்றிருப்பவர்தாமே.

### கோயில் - பண் - குறிஞ்சி

2-வது கட்டளை

*கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே.*

*ஞாலத்துயர்காழிஞானசம்பந்தன்
சீலத்தார்கொள்கைச்சிற்றம்பலமேய
சூலப்படையானைச்சொன்னதமிழ்மாலை
கோலத்தாற்பாடவல்லார்நல்லாரே.*

---

### திருவீழிமிழலை - பண் - குறிஞ்சி

3-வது கட்டளை

*வாசிதீரவே—காசுநல்குவீர்
மாசின்மிழலையீர்—ஏசலில்லையே.*

*காழிமாநகர்—வாழிசம்பந்தன்
விழிமிழலைமேல்—தாழுமொழிகளே.*

---

### திருச்சிராப்பள்ளி - பண் - குறிஞ்சி

4-வது கட்டளை

*நன்றுடையானைத்தீயதிலானைநரைவெள்ளே
றொன்றுடையானையுமையொருபாகமுடையானைச்
சென்றடையாததிருவுடையானைச்சிராப்பள்ளிக்
குன்றுடையானைக்கூறவென்னுள்ளங்குளிரும்மே.*

*தேனயம்பாடுஞ்சிராப்பள்ளியானைத்திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங்கழுமலவூரிற்கவுணியன்
ஞானசம்பந்தனலமிகுபாடலிவைவல்லார்
வானசம்பந்தத்தவரொடுமன்னிவாழ்வாரே.*

## திருப்பிரமபுரம் - பண் - குறிஞ்சி
### 5-வது கட்டளை

★ பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி, புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்புறவஞ்சண்பை, அரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங் காதியாய, பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழு மலநாம்பரவுமூரே.

காவிமலர் புரையுங்கண்ணார்கழுமலத்தின்பெயரைநாளும், பாவியசீர்ப்பன்னிரண்டுநன்னூலாப்பத்திமையாற்பரவன் மாலை, நாவினலம்புகழ்சீர்நான்மறையான்ஞானசம்பந்தன் சொன்ன, மேவியிசைமொழிவார்விண்ணவரிலெண்ணு தலைவிருப்புளாரே.

---

## திருவாரூர் - பண் - வியாழக்குறிஞ்சி (கட்டளை 6)
### முதலாவது கட்டளை

பாடலனான்மறையன்படிபட்டகோலத்தன்றிங்கள்
சூடலன்மூவிலையசூலம்வலனேந்திக்
கூடலர்மூவெயிலும்மெரியுண்ணக்கூரெரிகொண்டெல்லி
ஆடலனாதிரையனாரூரமர்ந்தானே.

நல்லபுனற்புகலித்தமிழ்ஞானசம்பந்தனல்ல
அல்லிமலர்க்கழனியாரூரமர்ந்தானை
வல்லதோரிச்சையினால்வழிபாடிவைபத்தும்வாய்க்கச்
சொல்லுதல்கேட்டல்வல்லார்துன்பந்துடைப்பாரே.

---

## திருவலிவலம் - பண் - வியாழக்குறிஞ்சி
### 2-வது கட்டளை

பூவியல்புரிகுழல்வரிசிலைநிகர்நுதல்
ஏவியல்கணைபிணையெதிர்விழியுமையவள்
மேவியதிருவுருவுடையவன்விரைமலர்
மாவியல்பொழில்வலிவலமுறையிறையே.

மன்னியவலிவலநகருறையிறைவனை
இன்னியல்கழுமலநகரிறையெழின்மறை
தன்னியல்கலைவலதமிழ்விரகனதுரை
உன்னியவொருபதுமுயர்பொருடருமே.

---

## போது - பண் - வியாழக்குறிஞ்சி

### 3-வது கட்டளை

அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீர்
உய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதுநாமடியோம்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறுதிருநீலகண்டம்.

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவான்
இறந்தபிறவியுண்டாகிலிமையவர்கோனடிக்கண்
திறம்பயின்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே.

---

## திருப்பருப்பதம் - பண் - வியாழக்குறிஞ்சி

### 4-வது கட்டளை

சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தான்
இடுமணியெழிலானையேறலனெருதேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப்
படுமணிவிடுசுடரார்பருப்பதம்பரவுதுமே.

வெண்செநெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான்
பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நன்சொலினற்பரவுஞானசம்பந்தனல்ல
ஒண்சொலினிவைமாலையுருவெணத் தவமாமே.

---

## திருக்கழுமலம் - பண் - வியாழக்குறிஞ்சி

### 5-வது கட்டளை

பந்தத்தால்வந்தெப்பால்பயின்றுநின்றவும்பரப்
பாலேசேர்வாயேனோர்கான்பயில்கணமுநிவர்களுஞ்
சிந்தித்தேவந்திப்பச்சிலம்பின்மங்கைதன்னொடுஞ்
சேர்வார்நாணணீள்கயிலைத்திகழ்தருபரிசதெலாஞ்
சந்தித்தேயிந்தப்பார்சனங்கணின்றுதங்கணாற்
றுமேகாணாவாழ்வாரத்தகவுசெய்தவனதிடங்
கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக்
காடார்பூவார்சீர்மேவுங்கழுமலவளநகரே.

கஞ்சத்தேனுண்டிட்டேகளித்துவண்டுசண்பகக்
கானேதேனேபோராருங்கழுமலநகரிறையைத்
தஞ்சைச்சார்சண்பைக்கோன்சமைத்தநற்கலைத்துறை
தாமேபோல்வார்தேனேரார்தமிழ்விரகனமொழிகள்
எஞ்சத்தேய்வின்றிக்கேயிமைத்திசைத்தமைத்தகொண்
டேழேயேழேநாலேமூன்றியலிசையிசையியல்பா
வஞ்சத்தேய்வின்றிக்கேமனங்கொளப்பயிற்றுவோர்
மார்பேசேர்வாள்வானோர்சீர்மதிநுதன்மடவரலே.

---

## திருத்தருமபுரம் - பண் - வியாழக்குறிஞ்சி

### 6-வது கட்டளை

★ மாதர்மடப்பிடியும்மடவன்னமுமன்னதோர்
நடையுடைம்மலைமகடுணையெனமகிழ்வர்
பூதவினப்படைநின்றிசைபாடவுமாடுவ
ரவர்படர்சடைந்நெடுமுடியதோர்புனலர்
வேதமொடேழிசைபாடுவராழ்கடல்வெண்டிரை
யிரைந்நுரைகரைபொருதுவிம்மிநின்றயலே
தாதவிழ்புன்னைதயங்குமலர்ச்சிறைவண்டறை
யெழில்பொழில்குயில்பயிறருமபுரம்பதியே.

பொன்னெடுநன்மணிமாளிகைசூழ்விழவம்மலி
பொரூஉபுனறிரூஉவமர்புகல்லியென்றுலகில்
தன்னெடுநேர்பிறவில்பதிஞானசம்பந்தனஃ
துசெந்தமிழ்த்தடங்கடற்றருமபுரம்பதியைப்
பின்னெடுவார்சடையிற்பிறையும்மரவும்முடை
யவன்பிணைதுணைகழல்கள்பேணுதலுரியார்
இன்னெடுநன்னுலகெய்துவரெய்தியபோகமும்
முறுவர்கள்ளிடர்பிணிதுயரணைவ்விலரே.

---

## திருவையாறு - பண் - மேகராகக் குறிஞ்சி (கட்டளை 2)

### முதலாவது கட்டளை

புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைம் மேலுந்தி, அலமந்தபோதாகவஞ்சேலென்றருள்செய்வா னமருங்கோயில், வலம்வந்தமடவார்கணடமாடமுழவ திரமழையென்றஞ்சிச், சிலமந்தியலமந்துமரமேறிமுகில் பார்க்குந்திருவையாறே.

அன்னமலிபொழில்புடைசூழையாற்றெம்பெருமானை யந்தண்காழி, மன்னியசீர்மறைநாவன்வளர்ஞானசம்பந் தன்மருவுபாடல், இன்னிசையாலிவைபத்துமிசையுங்கா லீசனடியேத்துவார்கள், தன்னிசையோடமருலகிற்றவ நெறிசென்றெய்துவார்தாழாதன்றே.

---

## திருப்பராய்த்துறை - பண் - மேகராகக் குறிஞ்சி

### 2-வது கட்டளை

நீறுசேர்வதொர்மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர்கோலமாய்ப்
பாறுசேர்தலைக்கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடையண்ணலே.

செல்வமல்கியசெல்வர்பராய்த்துறைச்
செல்வர்மேற்சிதையாதன
செல்வன்ஞானசம்பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவைசெப்பவே.

---

# இரண்டாந் திருமுறை

---

## திருப்பூந்தராய் - பண் - இந்தளம் (கட்டளை 4)

### முதலாவது கட்டளை

செந்நெலங்கழனிப்பழனத்தயலேசெழும்
புன்னைவெண்கிழியிற்பவளம்புரைபூந்தராய்
துன்னிநல்லிமையோர்முடிதோய்கழலீர்சொலீர்
பின்னுசெஞ்சடையிற்பிறைபாம்புடன்வைத்ததே.

மகரவார்கடல்வந்தணவும்மணற்கானல்வாய்ப்
புகலிஞானசம்பந்தனெழின்மிகுபூந்தராய்ப்
பகவனைப்பரவுசொன்மாலைபத்தும்வல்லார்
அகல்வர் தீவினைநல்வினையோடுடனுவரே.

---

## திருமறைக்காடு - பண் - இந்தளம்

### 2-வது கட்டளை

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும்
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
இதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே.

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
ஏழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே.

## திருமருகல் - பண் - இந்தளம்

3-வது கட்டளை

சடையாயெனுமால்சரணீயெனுமால்
விடையாயெனுமால்வெருவாவிழுமால்
மடையார்குவளைமலரும்மருகல்
உடையாய்தகுமோவிவளுண்மெலிவே.

வயஞானம்வல்லார்மருகற்பெருமான்
உயர்ஞானமுணர்ந்தடியுள்குதலால்
இயன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்
வியன்ஞாலமெல்லாம்விளங்கும்புகழே.

---

## திருநள்ளாறு - பண் - இந்தளம்

4-வது கட்டளை

ஏடுமலிகொன்றையரவிந்துவிள்வன்னி
மாடவலசெஞ்சடையெமைந்தனிடமென்பர்
கோடுமலிஞாழல்குரவேறுசுரபுன்னை
நாடுமலிவாசமதுவீசியநள்ளாறே.

ஆடலரவார்சடையனஞ்சிழைதன்னோடும்
நாடுமலிவெய்திடவிருந்தவனள்ளாற்றை
மாடமலிகாழிவளர்பந்தனதுசெஞ்சொல்
பாடலுடையாரையடையாபழிகளேயே.

---

## திருப்புள்ளிருக்குவேளூர் - பண் - சீகாமரம் (கட்டளை 2)

முதலாவது கட்டளை

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதியம்
உள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே.

செடியாயவுடறீர்ப்பான்றீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்குவேளூரைக்
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியன்சம்பந்தன்சொல்
மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாமறுபிறப்பே.

---

சீர்காழி - பண் - சீகாமரம்

2-வது கட்டளை

பண்ணினேர்மொழிமங்கைமார்பலர்பாடியாடியவோசை நாடொறுங், கண்ணினேரயலேபொலியுங்கடற்காழிப், பெண்ணினேரொருபங்குடைப்பெருமானையெம்பெருமானென்றென்றுன்னும், அண்ணலாரடியாரருளாளுங் குறைவிலரே.

பெயரெனும்மிவைபன்னிரெண்டினுமுண்டெனப் பெயர்பெற்றவூர்திகழ், கயலுலாம்வயல்சூழ்ந்தழகார் கலிக்காழி, நயனடன்கழலேத்திவாழ்த்தியஞானசம்பந்தன்செந்தமிழுரை, உயருமாமொழிவாருலகத்துயர்ந்தாரே.

---

திருப்புகலி - பண் - காந்தாரம் (கட்டளை 3)

முதலாவது கட்டளை

உருவார்ந்தமெல்லியலோர்பாகமுடையீரடைவோர்க்குக், கருவார்ந்தவானுலகங்காட்டிக்கொடுத்தல் கருத்தானீர், பொருவார்ந்ததெண்கடலொண்சங்கந்திளைக்கும்பூம்புகலித், திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே

ஒப்பரியபூம்புகலியோங்குகோயின்மேயானை
அப்பரிசிற்பதியானவணிகொண்ஞானசம்பந்தன்
செப்பரியதண்டமிழாற்றெரிந்தபாடலிவைவல்லார்
எப்பரிசிலிடர்நீங்கியிமையோருலகத்திருப்பாரே.

---

### போது - பண் - காந்தாரம்

#### 2-வது கட்டளை

★ வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்ல வீணைதடவி, மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெ னுளமேபுகுந்தவதனால், ஞாயிறுதிங்கள்செவ்வாய் புதன்வியாழம்வெள்ளிசனிபாம் பிரண்டுமுடனே, ஆசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே

தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நெறுன்னிவளர் செம்பொனெங்குநிகழ, நான்முகனாதியாயபிரமாபுரத்து மறைஞானஞானமுனிவன், தானுறுகோளுநாளுமடியா ரைவந்துநலியாதவண்ணமுரைசெய், ஆனசொன்மாலை யோதுமடியார்கள்வானிலரசாள்வராணைநமதே.

---

### திருவாலவாய் - பண் - காந்தாரம்

#### 3-வது கட்டளை

மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்திருவாலவாயான்திருநீறே.

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே.

---

### திருத்துருத்தி - பண் - நட்டராகம் (கட்டளை 2)

#### முதலாவது கட்டளை

வரைத்தலைப்பசும்பொனோடருங்கலன்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்திலங்குகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினாய்
உரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே.

கற்றுமுற்றினர்தொழுங்கழும்மலத்தருந்தமிழ்
சுற்றுமுற்றுமாயினனவன்பகர்ந்தசொற்களால்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே.

---

## திருவலஞ்சுழி - பண் - நட்டராகம்

### 2-வது கட்டளை

என்னபுண்ணியஞ்செய்தனைநெஞ்சமேயிருங்கடல்வையத்து, முன்னநீபுரிநல்வினைப்பயனிடைமுழுமணித்தரளங்கள், மன்னுகாவிரிசூழ்திருவலஞ்சுழிவாணனைவாயாரப், பன்னியாதரித்தேத்தியும்பாடியும்வழிபடுமதனாலே.

மாதொர்கூறனைவலஞ்சுழிமருவியமருந்தினைவயற்காழி, நாதன்வேதியன்ஞானசம்பந்தன்வாய்நவிற்றிய தமிழ்மாலை, ஆதரித்திசைகற்றுவல்லார்சொலக்கேட்டுகந்தவர்தம்மை, வாதியாவினைமறுமைக்குமிம்மைக்கும்வருந்தம்வந்தடையாவே.

---

## திருக்கேதாரம் - பண் - செவ்வழி

### 1-வது கட்டளை

தொண்டரஞ்சுகளிறுமடக்கிச்சுரும்பார்மலர்
இண்டைகட்டிவழிபாடுசெய்யுமிடமென்பரால்
வண்டுபாடமயிலாலமான்கன்றுதுள்ளவரிக்
கெண்டைபாயச்சுனைநீலமொட்டலருங்கேதாரமே.

வாய்ந்தசெந்நெல்விளைகழனிமல்கும்வயற்காழியான்
எய்ந்தநீர்க்கோட்டிமையோருறைகின்றகேதாரத்தை
ஆய்ந்துசொன்னவருந்தமிழ்கள்பத்தும்மிசைவல்லவர்
வேந்தராகியுலகாண்டுவீடுகதிபெறுவரே.

---

# மூன்றாந்திருமுறை.

கோயில் - பண் - காந்தார பஞ்சமம் (கட்டளை 3)

1-வது கட்டளை

ஆடினாய்நறுநெய்யொடுபாறயிரந்தணர்பிரியாதசிற்றம்பலம், நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே, பாடினாய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள், சூடினாயருளாய்சுருங்கவெமதொல்வினையே.

நாறுபூம்பொழினண்ணியகாழியுண்ணன் மறைவல்லஞானசம்பந்தன், ஊறுமின்றமிழாலுயர்ந்தாருறைதில்லைதன்னுள், ஏறுதொல்புகழேந்துசிற்றம்பலத்தீசனையிசையாற்சொன்னபத்திவை, கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே.

---

திருவாவடுதுறை - பண் - காந்தார பஞ்சமம்

2-வது கட்டளை

இடரினுந்தளரினுமெனதுறுநோய்
தொடரினுமுனகழறொழுதெழுவேன்
கடறனிலமுதொடுகலந்தநஞ்சை
மிடறினிலடக்கியவேதியனே.

இதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
அதுவோவுனதின்னருளாவடுதுரையரனே

அலைபுனலாவடுதுறையமர்ந்த
இலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
விலையுடையருந்தமிழ்மாலைவல்லார்.

வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகம்
நிலையாகமுன்னேறுவர்நிலமிசைநிலையிலரே.

## திருவிராமேச்சுரம் - பண் - காந்தார பஞ்சமம்
### 3-வது கட்டளை

அலைவளர்தண்மதியோடயலேயடக்கியுமை
முலைவளர்பாகமுயங்கவல்லமுதல்வன்முனி
இலைவளர்தாழைகள்விம்முகானலிராமேச்சுரம்
தலைவளர்கோலநன்மாலையன்றானிருந்தாட்சியே.

பகலவன்மீதியங்காமைக்காத்தபதியோன்றனை
இகலழிவித்தவனேத்துகோயிலிராமேச்சுரம்
புகலியுண்ஞானசம்பந்தன்சொன்னதமிழ்புந்தியால்
அகலிடமெங்குநின்றேத்தவல்லார்க்கில்லையல்லலே

## திருக்கழுமலம் - பண் - கோல்லி (கட்டளை 4)
### 1-வது கட்டளை

மண்ணினல்லவண்ணம்வாழலாம்வைகலும்
எண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவிலைக்
கண்ணினல்லஃதுறுங்கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும்பெருந்தகையிருந்ததே.

கருந்தடந்தேன்மல்குகழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோடிருந்தவெம்பிரான்றனை
அருந்தமிழ்ஞானசம்பந்தனசெந்தமிழ்
விரும்புவாரவர்கள்போய்விண்ணுலகாள்வரே.

## திருவாலவாய் - பண் - கோல்லி
### 2-வது கட்டளை

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவனென்றுநீபரிவெய்திடேல்
ஆனைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சேர்
ஈனர்கட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே.

எக்கராமமண்கையருக்கெளியேனவேன்றிருவாலவாய்ச் சொக்கனென்னுளிருக்கவேதுளங்கும்முடித்தென்னன் முன்னிவை, தக்கசீர்ப்புகலிக்குமன்றமிழ்நாதன்ஞானசம் பந்தன்வாய், ஒக்கவேயுரைசெய்துபத்துமுரைப்பவர்க்கிட ரில்லையே.

---

## திருக்கச்சியேகம்பம் - பண் - கோல்லி

### 3-வது கட்டளை

கருவார்கச்சித்—திருவேகம்பத்
தொருவாவென்ன—மருவாவினையே.

கொச்சைவேந்தன்—கச்சிக்கம்பம்
மெச்சுஞ்சொல்லை—நச்சும்புகழே.

---

## போது - பண் - கோல்லி

### 4-வது கட்டளை

★ ஆரூர்தில்லையம்பலம்வல்லநல்லம்வடகச்சியுமச்சிறு பாக்கநல்ல, கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணிகடல் சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார், நீரூர்வயனின்றியூர் குன்றியூருங்குருகாவையூர்நாரையூர்நீடுகானப், பேரூர் நன்னீள்வயனெய்த்தானமும்பிதற்றய்பிறைசூடிதன் பேரிடமே.

அம்மானையருந்தவமாகிநின்றவமார்பெருமான்பதியா னவுன்னிக், கொய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகொச்சைக் கிறைவன்சிவஞானசம்பந்தன்சொன்ன, இம்மாலையீரைந் துமிருநிலத்திலிரவும்பகலுந்நினைந்தேத்திநின்று, விம்மா வெருவாவிரும்பும்மடியார்விதியார்பிரியார்சிவன்சே வடிக்கே.

---

போது - பண் - கௌசிகம் (கட்டளை 2)

முதலாவது கட்டளை

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனுமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே.

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
எல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களும்மதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானேருலகாளவும்வல்லரன்றே.

---

திருவாலவாய் - பண் - கௌசிகம்

2-வது கட்டளை

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழல்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதில்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே.

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினல்
ஆயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையாவர்தேவரே.

---

திருப்பனந்தாள் - பண் - பஞ்சமம் (கட்டளை 1)

கண்பொலிநெற்றியினன்றிகழ்கையிலொர்வெண் மழுவான்
பெண்புணர்கூறுடையான்மிகுபீடுடைமால்விடையான்
விண்பொலிமாமதிசேர்தருசெஞ்சடைவேதியனூர்
தண்பொழில்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே.

